# கோவிந்தசதகம்.

பழமொழியோடுமூலபாடம்.

நாராயணபாரதியாராலே

செய்யப்பட்டது.

---

இது.

கையெழுத்துப்பிரதிகளில்-பாடந்தோறும்பிழைபடு
கின்றதையும் - அச்சுப்பதித்தபிரதிகள்ள்ட்டுப்
பிரதிகள்போல[illegible]ட்டுப்பிரதிகளா
யிருக்கின்றதையுநோக்கி - அதை
விலக்கும்பொருட்டுச்சென்னைமாநகரத்துப்
பூவைசியப்பிரபுக்களில்
கவுண்டாண்ட்ஜெனல்ஆபிசில் - பாண்டிஷ்ப்பாட்டுமென்மொனேசர்
௱-௱-புல்லறம்பாக்கம்

## வேதாசலமுதலியாரும்

கோவைசியப்பிரபுக்களில்ஷிஆபிசில் - சுப்பிரீம்கோட்கவுண்டாண்டு
எழூமூர் - ௱ - ௱ - மண்ணூடி

## வெங்கட்டசுப்புராயபிள்ளையும்

கேட்டுக்கொண்டதால் - சென்னை[illegible]கல்விச்சங்கத்துத்
தமிழ்ப்புலவர்

## திருவேங்கடாசலமுதலியாராலே

பலபிரதிகளைக்கொண்டாராய்ந்து - பிழைகளைத்திருத்தி - இதிலுள்ள
கவிகளுக்கெல்லாம் ஒத்தபழமொழிகளுந்தனித்தனி
சேர்த்துஅவரதுசரஸ்வதிஅச்சுக்கூடத்தில்[illegible]ப்பிக்கப்பட்டது.

---

இது இவரது முக்கிய இஷ்டர்கள்

## பொ. இராமசாமிநாயகராலும்

## ஆ. பொன்னரங்கமுதலியாராலும்

நிறைவேறினது.

சாலிவாகனசகாப்தம் - ௲௭௱௬௧ - விளம்பி௵.

1834

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖






நன்ருக - குருவாழ்க - குருவேதுணை.

# கோவிந்தசதகம்.

கலித்துறைகள்.

காப்பு.

மாவேழங்கூப்பிடவந்தாயுலகவழக்கச்சொல்லென் *
பாவேறயானுனக்கோர்சதகஞ்சொலப்பாரதியென் *
நாவேறவாழ்த்துகின்றேனுனை[illegible]த்தருணன்முகற்கும் *
கோவேசக்கிராயுதனேயச்சுதானந்தகோவிந்தனே. *

[படிக்கரசனிருந்தாற்குடிக்குச்சேதமில்லை.]

செடிக்கொருவேங்கைகுடிகொண்டகாடெனத்தேசத்திலே *
அடிக்கொருதீம்புசெய்வாரைத்துரந்தரசாளரவிந்தப் *
படிக்கொருமன்னனுண்டானாலுழுதுபயிரிடுமக் *
குடிக்கொருசேதமுண்டோவச்சுதானந்தகோவிந்தனே (௧)

[கொட்டினாற்றேள் கொட்டாவிட்டாற்பிள்ளைப்பூச்சி.]

கட்டாண்மைவேந்தர்பொறுமையெண்ணாதவன்கண்ணரடி *
பட்டாலல்லாமல்வணங்கார்விடமுட்படாமற்சும்மாத் *
தொட்டாலதுபிள்ளைப்பூச்சியென்பார்முட்சுறுக்கெனவே *
கொட்டாமற்றேளென்பரோவச்சுதானந்தகோவிந்தனே (௨)

[புண்ணிலேகோலிட்டதுபோல.]

பாவிட்டதாகியநீர்போற்கலந்துபகருங்கல்வி *
நூலிட்டகேள்விக்குள்ளாவர்நல்லோரிருநூறுதரம் *
மேலிட்டபுத்திசொன்னாலுங்கயவர்க்குவெந்தபுண்ணிற் *
கோலிட்டவாறொக்குமேயச்சுதானந்தகோவிந்தனே (௩)

{முழுக்கட்டிபேர்க்கிறபன்றிக்குக்
கொழுக்கட்டிவிட்டதுபோல.}

கழுக்கட்டியேற்றினுங்காசொன்றிலையெனக்கைவிரித்தே *
மழுக்கட்டியேந்தவல்லாரையுத்தியோகத்தில்மன்னர்வைத்தல் *

முழுக்கட்டிபேர்த்துக்கிழங்குண்ணும்பன்றியின்மூஞ்சியிலே *
கொழுக்கட்டிவிட்டதன்றோவச்சுதானந்தகோவிந்தனே (௪)

{எலிக்கனுகூலம்பாம்புபிடாரனுக்கஞ்சி-எளியார்க்கனுகூ
லம்வலியார் அரசனுக்கஞ்சி. காலத்துக்குத்தக்கக்கோலம்.}

நீலங்கவர்விடப்பாம்பைப்பிடாரனியமிக்கவே *
ஆலங்கரந்திட்டெலியுடன்வாழுமரசர்க்கஞ்சிக் *
காலங்கருதிவலியாரெளியரைக்காணிலனு *
கூலரைப்போலிருப்பாரச்சுதானந்தகோவிந்தனே (௫)

{தடுப்பார்புலியைஎடுப்பார்மழுவைகொடுப்பார்அருமை.
குட்டிக்கரணம்போட்டாலுங்கொடுக்கிறதரிது.}

தடுப்பார்புலியையும்பாம்பையும்வாய்கட்டித்தாங்கிக்கையால் *
எடுப்பார்மழுவைத்தண்ணீர்மேனடப்பரெவருமெய்ச்ச *
அடுப்பார்சபையினினூற்றெட்டடிக்கம்பத்தாடுவர்பொன் *
கொடுப்பாரரியர்கண்டாயச்சுதானந்தகோவிந்தனே (௬)

{ஆயன்கணக்குஆருக்குந்தப்பாது.
ஆயனிட்டஎழுத்திலேஅணுவளவுங்குறையாது.}

ஆலிக்கவாழ்ந்தண்டிருந்தாலும்யார்க்குமயன்வகுத்த *
சோலிக்கணக்கின்படிதப்புமோதொழுவார்க்குமுத்தி *
பாலிக்கும்வெள்ளிமலையான்பிரம்படிபட்டுப்பிட்டின் *
கூலிக்குமண்சுமந்தானச்சுதானந்தகோவிந்தனே (௭)

[கொடுத்தாற்குறைவருமோ.]

எடுத்தாலுமூறுமிறைத்தாலுமூறுமிடைநடுவே *
மடுத்தால்மறிபடுமோமணற்கேணித்தண்ணீரதுபோல் *
அடுத்தாரைவாழ்விக்கக்கல்வியுண்டானவரன்புடனே *
கொடுத்தாற்குறைவருமோவச்சுதானந்தகோவிந்தனே (௮)

[குளத்துக்குமழைகுந்தாணிபோற்பெய்யுமா.]

எந்தாயெனச்சென்றிரப்பவர்க்கீபவரெள்ளளவு *
தந்தாலும்போதுமிகழவொண்ணாதெங்குஞ்சஞ்சரித்து *
வந்தார்பருகுங்குளத்துக்குப்பெய்யுமழைத்துளிகள் *
குந்தாணிபோற்பெய்யுமோவச்சுதானந்தகோவிந்தனே (௯)

{கோடாலிக்காம்புகுலத்துக்கீனம்.
குலத்தைக்கெடுப்பதுகோடாலிக்காம்பு.}

மூடார்குலத்தினிலாகாதபிள்ளைதற்பெற்றெடுத்தோர் *
வாடாதுவாடக்குலநாசமாக்கிடுமற்றதுதான் *

தாட்ாண்மையாளர்கைக்குள்ளாய்த்தருக்குலஞ்சாயவெட்டும் *
கோடாலிக்காம்பல்லவோவச்சுதானந்தகோவிந்தனே (௰)

{அரைக்காசுக்குப்போனகற்பு
ஆயிரங்கொடுத்தாலும்வராது.}

எடுத்தாலும்பிச்சையமுதுநன்றேயில்லையாகிலுயிர் *
விடுத்தாலும்வாசிநட்பில்லார்மனையில்விருந்தெனப்போய் *
அடுத்தாவதேதரைக்காசுக்குப்போனகற்பாயிரம்பொன் *
கொடுத்தாலுந்தான்வருமோவச்சுதானந்தகோவிந்தனே (௰௧)

[பொல்லாக்குணத்துக்குநல்லமருந்துண்டா.]

உணத்தக்கநன்மருந்தாற்பிணியோமென்றுலகிலுள்ளோர் *
பணத்துக்குக்கொண்டுபரிகரிப்பார்விடம்பாய்ந்துசெத்த *
பிணத்துக்கும்பச்சிலையுண்டுபுல்லோர்க்குப்பிறக்கும்பொல்லாக் *
குணத்துக்குநன்மருந்தேதச்சுதானந்தகோவிந்தனே (௰௨)

[கவிகொண்டார்க்குங்கீர்த்திகலைப்பார்க்குங்கீர்த்தியா.]

மலைப்பாற்குறுமுனிபோலும்புலவர்வடித்ததமிழ் *
விலைப்பாற்படுத்திற்கொள்வார்க்குண்டுகீர்த்திவிதண்டைசெய்து *
கலைப்பார்க்கும்பேய்கொண்டநாய்களைப்போற்பல்லைக்காட்டிநின்று
குலைப்பார்க்குங்கீர்த்தியுண்டோவச்சுதானந்தகோவிந்தனே (௰௩)

{வெள்ளாட்டிச்சன்னதங்கும்பிடுகொள்ளாமற்போகாது.
வெள்ளாட்டிமேற்சன்னதம்வந்தால் விழுந்துவிழுந்து
கும்பிடவேணும்.}

எள்ளாடும்வாணியர்செக்கடித்துண்டிடுமினமொன்று *
விள்ளாரவர்க்குப்பவிஷு வந்தால்நித்தம்வேலைசெய்யத் *
தள்ளாதடிபடும்வெள்ளாட்டிமேற்சன்னதங்கும்பிடு *
கொள்ளாமற்போவதுண்டோவச்சுதானந்தகோவிந்தனே (௰௪)

{கொடுப்பாரைத்தடுக்காதே.
கெடுப்பாரைத்தெய்வங்கெடுக்கும்.}

உடுப்பாருண்பார்தமைப்போனினையாதொருவன்பிழைப்பைக் *
கெடுப்பாரைத்தெய்வங்கெடுக்குமென்றேசொல்லக்கேட்டிருந்தும்
விடுப்பாரன்றேபுல்லர்துர்க்குணமுற்றும்விதரணத்தாற் *
கொடுப்பார்தமைத்தடுப்பாரச்சுதானந்தகோவிந்தனே (௰௫)

{தோட்டத்துநரிகூட்டத்திலேவருமா.
கள்ளரநரிசந்தையேறுமா.}

நாட்டம்பணத்தில்வைக்குங்கள்ளரலோபர்நன்னுவலர்கள் *
ஓட்டந்தனைக்கண்டுகிட்டுவரோவினாதேடிமனைத் *

தோட்டம்புகுநரியஞ்சாமனெஞ்சந்துணிந்துசந்தைக் *
கூட்டந்தனிலவருமோவச்சுதானந்தகோவிந்தனே (௰சா)

[நாய்வாலைக்குணக்கெடுக்கஆராலாகும்.]

இணக்காதிரார்வல்லிரும்பொடிந்தால்வைத்திருதலையும் *
வணக்காதிரார்வின்னிமிர்ந்ததென்றால்புல்லர்மாறுபடும் *
பிணக்கார்தடுப்பவர்நாய்வாலைநீளப்பிடித்திழுத்துக் *
குணக்காரொடுக்கவல்லாரச்சுதானந்தகோவிந்தனே (௰எ)

[குளப்படிநீரிறைத்தாகடற்பள்ளரம்நிரம்பும்.]

இறைமுறையேழைக்குடிகளைநோகச்செய்தேபசும்பொன் *
அறையிடும்பொக்கசந்தானிரம்பாதரசர்க்கியல்போ *
நிறைகடற்கென்னகுறைவோகுளப்படிநீரிறைத்துக் *
குறைவறச்செய்பவராரச்சுதானந்தகோவிந்தனே (௰அ)

{ ஒருவன்தலையில்மாணிக்கமிருக்கிறதென்றால் அவன்தலையைவெட்டுவார்களோ. எருதீன்றதென்றாற்கொட்டாயிற்கட்டென்கிறான். }

கிட்டியொருவன்றலைக்குளிரத்தினங்கிளைத்ததென்றால் *
வெட்டிவெளிசெய்யவேணுமென்றேவிரும்பார்பெரியோர் *
எட்டினைமாத்திரம்புத்தியில்லாரெருதீன்றதென்றாற் *
கொட்டிலுட்கட்டுமென்பாரச்சுதானந்தகோவிந்தனே (௰கூ)

{ முத்துக்குலத்தாற்பெருமைபடும் மூடர்குலத்தாற்பெருமைபடார். }

சலத்தால்விளைகின்றசிப்பியின்வாய்முத்தைத்தற்குலந்தான் *
சொலத்தானெவருமிகழார்விரும்பித்தொகுத்தணிவார் *
அலத்தாமதவறிவினர்செனன்மதாகியநற் *
குலத்தாற்பெருமைபெறாரச்சுதானந்தகோவிந்தனே (உ௰)

[நாயைக்குளிப்பாட்டிநடுவீட்டில்வைத்தாற்போல.]

களிப்பாற்றுணைகளறிவீனரைக்கைப்பிடித்துச்செல்வம் *
அளிப்பாரெனிற்பின்னைக்கிடமாமென்றுமாவதில்லை *
வெளிப்பாற்றிரிகின்றநாயானதைநடுவீட்டுக்குள்ளே *
குளிப்பாட்டிவைத்ததொப்பாமச்சுதானந்தகோவிந்தனே (உக)

{ ஆண்டிகையில்அகப்பட்டகுரங்காய்அலைகிறான். ஆண்டிகையிற்குரங்கானான். }

வரங்காதலிக்குந்தவமுடையோர்வங்கணமெவர்க்கும் *
உரங்காணுநன்மைபெறலாங்கயவருடன்கலந்தால் *

அரங்காஞ்சபையிற்சடையாண்டிகையிலகப்பட்டதோர் *
குரங்காயலைவர்கண்டாயச்சுதானந்தகோவிந்தனே (உஉ)

[வம்புத்துரைத்தனத்தாரைக்கும்பிடவுந்தகுமோ.]

செம்பிடுமேனியுருக்கொண்டதெய்வத்தைத்தெண்டனிட்டு *
நம்பிடவேண்டும்பதம்பெறலாநம்பினோர்க்குதவா *
வம்பிடும்லோபத்துரைத்தனப்பேய்களைமன்னரென்று *
கும்பிடவுந்தகுமோவச்சுதானந்தகோவிந்தனே (உங)

[குருவிக்கூண்டைக்கோலாலேகுலைப்பார்களா.]

சோட்டைப்புனேந்திரணவேட்டையாடுந்துரைகடங்கள் *
நாட்டைப்புரப்பதுஞாயங்கெடுப்பதுஞாயமன்றே *
வீட்டுக்குணம்பியடைக்கலச்சிட்டுவெண்முட்டையிடும் *
கூட்டைக்குலைப்பர்களோவச்சுதானந்தகோவிந்தனே (உச)

{பொன்னின்குடத்துக்குப்
பொட்டிட்டுப்பார்க்கவேணுமோ.}

சடத்துக்கழகென்பர்தான்கற்றகல்விதருமதல்லால் *
இடத்தக்கபூஷிணந்தானணியாவிடிலேசுவரோ *
புடத்திட்படத்தங்கக்கட்டியுருக்கிப்புதுக்கியபொற் *
குடத்துக்குப்பொட்டழகேனச்சுதானந்தகோவிந்தனே (உரு)

[படியாள்வார்நீதிதப்பிற்குடியாரிருப்பார்குவலயத்தில்.]

படியாளுமன்னர்மனுநீதிதப்பும்படிநடந்தால் *
விடியாதுநாடுமழைபொழியாதுவிளைவுகுன்றும் *
பொடியாம்பசும்புன்னெருப்பெழக்காயுமப்பூமிதனிற் *
குடியாரிருக்கவல்லாரச்சுதானந்தகோவிந்தனே (உசா)

[கோவுக்கழகுசெங்கோல்.]

பாவுக்கழகுபொருட்சுவைசொற்சுவைபன்மலர்ப்பூங் *
காவுக்கழகுமயிலுங்குயிலுங்கண்டாய்கமலப் *
பூவுக்கழகுமணமுந்திருவும்புவிபுரக்கும் *
கோவுக்கழகுசெங்கோலச்சுதானந்தகோவிந்தனே (உஎ)

{முட்டுப்பட்டுஞ்செயம்வருமாகில்
குட்டுப்பட்டாற்குறைவாமோ.}

மட்டுப்படாதவனுமாரசோகவனமழித்துக் *
கட்டுப்பட்டாரிந்திரசித்தன்கையாற்கர்த்தன்காரியத்தால் *
முட்டுப்பட்டாலுஞ்செயங்கொள்வராகிற்பொன்மோதிரக்கைக் *
குட்டுப்பட்டாற்குறைவோவச்சுதானந்தகோவிந்தனே (உஅ)

# கோவிந்தசதகம்.

{திக்குவிசயம்பண்ணினவனுக்குஞ்செயாப
செயந்தெரியாது. செயமொருத்தன்பங்கா.}

இயல்புடனிக்குவிசயங்கொள்வேந்தரென்றாலும்ப *
செயம்வருங்காலந்தெரிபவரார்திருவுந்திறமும் *
புயபெலமுநின்றவோவிக்கிரமாதித்தன்போர்பொரப்போய்க் *
குயவன்கையால்மடிந்தானச்சுதானந்தகோவிந்தனே (௨௯)

[பாலைப்புகட்டுவாள்பாக்கியத்தையும்புகட்டுவாளோ.]

சலிக்கக்கணக்கென்னதான்பெற்றபிள்ளைக்குத்தாய்முலைப்பால் *
ஒலிக்கக்கனிந்தமுதூட்டிவளர்ப்பள்பின்னூழ்வினையால் *
பலிக்குட்படிலன்னையென்செய்வள்பாக்கியம்பாலடையில் *
குலுக்கிப்புகட்டுவளோவச்சுதானந்தகோவிந்தனே (௩௰)

{எல்லைபாழ்பட்டாலுங்கொல்லைக்கடமைவிடார்.
காடுவிளையாவிட்டாலுங்கடமைகைக்கொள்வார்.}

சொல்லைப்புரட்டுங்கொடுங்கோன்மணியத்தர்தோஷமெண்ணார் *
கல்லலற்படுத்திக்குடிகளைநோகக்கணக்கெழுதி *
எல்லைக்குளாநிலம்பாழ்படினும்பிடித்தேருழுத *
கொல்லைக்கடமைவிடாரச்சுதானந்தகோவிந்தனே (௩௧)

[கப்பலேறிப்பட்டகடன்கொட்டைநூற்றோவிடியும்.]

இட்டுநோற்றுப்பிறந்தாற்செல்வமூற்றுமிடாதவிதி *
பட்டுநூற்றுக்கிருந்தேயுழைத்தாலும்பலிஷெய்துமோ *
விட்டுநோக்குங்கப்பலோடியுமேவிடியாமனையிற் *
கொட்டைநூற்றோவிடியுமச்சுதானந்தகோவிந்தனே (௩௨)

{மானுக்கொருபுள்ளியேறின
லென்னகுறைந்தாலென்ன.}

நிறைந்தேவருங்கப்பலாயிரந்தம்மினின்றோர்கப்பல்தான் *
மறைந்தேதிகைதப்பிற்றாழ்வென்றெண்ணார்வர்த்தகர்கள்வனத் *
துறைந்தேவளர்புள்ளிமானுக்குடம்பினிலோர்புள்ளிதான் *
குறைந்தேதல்லான்மிகுந்தேதச்சுதானந்தகோவிந்தனே (௩௩)

{கங்காநதியில்முழுகினாலும்காக்கைஅன்னம்ஆமா. கங்காநதியி
ல்முழுகிக்காகமைச்சிங்காரஅன்னமாய்ச்செல்லமாட்டுமோ.
முக்காலுங்காக்காய்முழுகிக்குளித்தாலுங்கொக்காமோ.}

ஒளித்தாலுந்துர்க்குணம்போமோகுருவுபதேசமந்திரம் *
அளித்தாலும்புல்லர்நல்லோராவரோசென்றடுத்தடுத்துக் *
களித்தாயிரந்தரங்காகம்முழுகிக்கங்காநதியிற் *
குளித்தாலுமன்னமொவ்வாதச்சுதானந்தகோவிந்தனே (௩௪)

{ பருவந்தப்பிச்சாவிபட்டாலும்குருவிக்கினாகொதிக்கஇல்லை
யா - கொல்லைபாழானாலும்குருவிக்குமேய்ச்சல்இல்லையா. }

தருவிற்பனமன்னர்கையிளைத்தாலென்னதம்மைநம்பி *
மருவித்திரியுஞ்சனங்கள்பசிகொண்டுவாட்டமெய்தார் *
பருவக்குறிப்பின்றிச்சாவிபட்டாலும்பயிர்க்கொல்லையிற் *
குருவிக்கினாபஞ்சமோவச்சுதானந்தகோவிந்தனே (௬௫)

{ இராவுத்தனைத்தள்ளினதுமல்லாமல்
குழியும்பறித்ததாம்குதிரை. }

மொழியின்படிநடவாடன்கணவனைமோசஞ்செய்து *
பழியுஞ்சுமக்குர்படிசெய்தல்நம்பப்படர்விசிகம் *
பொழியுஞ்சமரிடைராவுத்தனைத்தள்ளிப்போட்டசுவம் *
குழியும்பறித்ததொப்பாமச்சுதானந்தகோவிந்தனே (௬௬)

[ கொடிக்குக்காய்கனத்திருக்குமா. ]

அடித்தமுதூட்டிவளர்த்திடுந்தாய்தன்னகமெலிவா *
மிடித்திடினும்பெற்றபிள்ளைகளைக்கைவிடநினையாள் *
பொடித்தெழும்பிஞ்சுதிரளாயும்பாரம்பொறுக்கும்படர் *
கொடிக்கென்னகாய்கனமோவச்சுதானந்தகோவிந்தனே (௬எ)

[ நெருப்புசிறிதென்றுமுன்றானையில்முடியலாமா. ]

தண்டாரணியுமரசிளம்பாலகர்தம்மையெதிர் *
கண்டாலிளையனொன்றெண்ணவொண்ணாதுகண்டாரெவரும் *
அண்டாநெருப்பைச்சிறிதென்றுமுன்றானையில்முடிந்து *
கொண்டாலதுசுடுங்காணச்சுதானந்தகோவிந்தனே (௬அ)

[ மீன்குஞ்சுக்குநீச்சுப்பழக்குகிறார்களா. ]

பிஞ்சுப்பருவமுலைவிலைப்பெண்கள்பெறும்பொருட்கா *
வஞ்சிக்கும்வித்தைகுலவித்தைதானேவருமவர்க்கு *
விஞ்சுக்குரைப்புனனீச்சுப்பழக்குவிந்தாரெவர்மீன் *
குஞ்சுக்குத்தற்குணங்காணச்சுதானந்தகோவிந்தனே (௬௯)

{ நீஞ்சவறியாதவனை ஆறிழுத்துப்போம்.
நீச்சறியாதவனைவெள்ளங்கொண்டுபோம். }

விடுபோர்முகத்தில்நகைப்பாரொனச்சுத்தவீரர்சண்டை *
யிடுபோதொளிந்துபிழையாமலாண்மையிலார்மதிகெட் *
டடுபோரினிற்புகினீஞ்சறியான்றனையாறிழுத்துக் *
கொடுபோனவாறுக்குமேயச்சுதானந்தகோவிந்தனே (எ௰)

[ முட்டநனைந்தார்க்குக்குளிரில்லை. ]

தளிரோயனையமெய்ப்பெண்டீர்கணவன்றனையிகழ்ந்து *
வெளியேபுறப்பட்டுக்கற்பழிந்தாற்பின்னைவெட்கமென்னை *

நளிரோதரும்புனரேய்ந்துடம்பெங்குநனைந்தவர்க்குக் *
குளிரோதப்பாலென்பரோயச்சுதானந்தகோவிந்தனே (சக)

{நூற்றுக்கிருப்பவர்க்கைம்பதிற்சாவில்லை.
நூற்றுக்கிருந்தாலும்கூற்றுக்கிரை.}

சோற்றுக்கடன்கொண்டிருக்குஞ்சரீரந்தொலையுமில்லா *
தாற்றுப்புனலிற்குமிழியைப்போலென்றழுங்கிலென்னும் *
நூற்றுக்கிருப்பவர்க்கைம்பதிற்சாவில்லைநூற்றுக்கப்பால் *
கூற்றுக்கிரையென்பரோயச்சுதானந்தகோவிந்தனே (சஉ)

[நன்றிசெய்தகீரியைக்கொன்றபழங்கதைபோல்.]

நன்றிசெய்தாரொன்றறியாமற்றீங்குநமக்குச்செய்தார் *
என்றுசெருக்கவொண்ணுதுகுழந்தைபிளந்தசையைத் *
தின்றெதிர்வந்ததுகீரியென்றந்தணன்றேவிமுன்னுள் *
கொன்றபழங்கதையாமச்சுதானந்தகோவிந்தனே (சங)

[கறையான்புற்றில்அரவங்குடிகொண்டதுபோல்.]

அடிகொண்டளந்திட்டுக்கோட்டையரண்செய்தென்னுண்மையி [ல்லார்]
கெடிகொண்டவேந்தர்கைக்கொள்வாரவராப்பின்கிட்டவொட் [டார்]
படிகொண்டமண்ணிற்கறையானிடும்புற்றிற்பாம்புவந்து
குடிகொண்டிருப்பதுவாமச்சுதானந்தகோவிந்தனே (சச)

[பன்றிக்குட்டிக்கொருசந்தியேன்.]

தெட்டிப்பறிக்கின்றவேசியர்வீட்டிற்றிரிந்தலையும் *
மட்டிக்குலாமருக்காசாரமேன்றெய்வவந்தனையேன் *
பட்டிக்கொதுங்கியடிபடுமூர்க்கரும்பன்றியிட்ட *
குட்டிக்கொருசந்தியேனச்சுதானந்தகோவிந்தனே. (சரு)

{அற்பனுக்குப்பவிஷு வந்தால்அர்த்தரா
த்திரியிலுங்குடைபிடிக்கச்சொல்வார்.}

நடைகற்குமுன்னங்கொடைகற்றபேர்க்குநடக்கைவந்தாற் *
புடையுற்றெவருந்துதிக்கவணங்கிப்புகழ்பெறுவார் *
அடையற்பருக்குப்பவிஷுவந்தாலர்த்தராத்திரியினும் *
குடையைப்பிடியென்பர்காணச்சுதானந்தகோவிந்தனே (சசு)

[பிடாரியைப்பெண்டுவைத்துக்கொண்டவன்பேயனன்றே.]

கண்டனுக்கேற்றவளாக்குலமானுஷிக்கற்பினளாத் *
தெண்டனைக்கஞ்சிநடப்பவளாமணஞ்செய்வதல்லாற் *
பிண்டமும்துண்டமும்நேர்ந்தேபிடாரியைப்பெண்டுவைத்துக் *
கொண்டவன்பேயனன்றேவச்சுதானந்தகோவிந்தனே (சஎ)

கொழுமீதிகொள்ளுங்குடிச்செல்வமேசெல்வம்.

பொடிச்செல்வம்யாசகச்செலவங்கொடுமைப்பொருட்செல்வமோர்
நொடிச்செல்வமீதலில்லாச்செல்வம்விண்செல்வம்நாற்றுக்குமே
மிடிச்செல்வமின்றிச்சுகசீவியாக்கொழுமீதிகொள்ளும் *
குடிச்செல்வமேசெல்வங்காணச்சுதானந்தகோவிந்தனே (௪௮)

கசக்கிமுகரலாகாது.

வண்டானதுமெள்ளப்பூமணங்கொள்ளுவகையதுபோல் *
பெண்டாசையுள்ளவர்காமசம்போகம்பெறுவதலலால் *
கண்டாதரவின்மலரொடுத்தேகசக்கிம்முகர்ந்து *
கொண்டால்மணந்தருமோவச்சுதானந்தகோவிந்தனே (௪௯)

{ தானேகனியாதகாய்தடிகொண்டடித்தாக்
கனியப்போகிறது. }

அண்டினர்க்கீபவர்தாமேதருவதல்லாதிரப்போர் *
தெண்டனைகாகக்கொடுப்பதுண்டோசெழுங்காய்மரத்திற் *
கண்டிடிற்றானேகனியாதமுன்கனியத்தடிகைக் *
கொண்டடித்தாற்கனியாதச்சுதானந்தகோவிந்தனே (௫௰)

கிளியைவளர்த்துப்பூனைகையிற்கொடுப்பாருண்டா.

விடுப்பார்பிழைக்கும்வழிபினல்லோரன்றிவேறுபடக் *
கெடுப்பார்வசஞ்செய்வரோநம்பினோரைக்கிளிப்பிள்ளையை *
எடுப்பார்கையாரவளர்ப்பதல்லாலெட்டிப்பூனைகையிற் *
கொடுப்பாருலகிலுண்டோவச்சுதானந்தகோவிந்தனே (௫௧)

எய்தவனிருக்க அம்பைநோகலாமா.

உண்டானகுற்றஞ்சகியாமல்வேந்தனுத்தாரமிட்டால் *
திண்டாடத்தெண்டனைசெய்வார்க்குக்குற்றமுந்தெண்டமுமோ *
அண்டாமல்விற்பிடித்தெய்தோனிருக்கக்கண்டம்பைநொந்து *
கொண்டாலவ்வம்பென்செயுமச்சுதானந்தகோவிந்தனே (௫௨)

ஒருபுத்திரனும்குருபுத்திரனுகான்.

வருபுத்திரவாஞ்சையிற்றெய்வத்தைவாழ்த்திவணங்கிவரம் *
தருபுத்திரனைப்பெறிற்காவடிகட்டித்தன்தாய்தந்தையை *
ஒருபுத்திரனேனுஞ்சுமந்ததுண்டோவுலகம்புகழக் *
குருபுத்திரனேசுமந்தானச்சுதானந்தகோவிந்தனே (௫௩)

{ கொக்கரிப்பார்க்காசொற்கம் - தீயில்
குதிப்பவளுக்கல்லோசொற்கம். }

கதிப்பால்நடத்துங்குதிரையும்யானையுங்கால்பலமும் *
மதிப்பாலிகல்சுத்தவீரர்க்குச்சொற்கம்வருவதுபோல் *

துதிப்பார்க்குங்கொக்கரிப்பார்க்குமுண்டோதுணிந்தேநெருப்பில்
குதிப்பாளொருத்திக்கன்றேவச்சுதானந்தகோவிந்தனே (௫௪)

{கொடியபரத்தைக்குக்கொடுக்கும்பணயத்தைக்
குடியிற்பெண்வாங்கிக்குலங்கெடுவாளா.}

மிடியிற்கொடுமைக்கிரப்பதல்லாற்குலமேன்மைகுன்றப் *
படியிற்பசும்பொன்தரிற்கொள்வரோபரிவாற்பெரியோர் *
கொடியப்பரத்தையர்க்குக்கொடுக்கும்பணயங்கொளென்றால் *
குடியிற்பெண்வாங்குவளோவச்சுதானந்தகோவிந்தனே (௫௫)

{அறவுங்கொடுங்கோல்அரசர்கீழிருப்பு
குறவன்குடியிருப்பே.}

திறமுஞ்செங்கோலுமுளமன்னர்நாட்டிற்சிந்தாகுலந்தீர்ந் *
துறவுங்குடிசதமென்றிருப்பார்பயிரிட்டுண்பர்காண் *
அறவுங்கொடுமைசெயுமன்னர்சீமைக்குள்ளாமிருப்பு *
குறவன்குடியிருப்பேயச்சுதானந்தகோவிந்தனே (௫௬)

{நல்லவர்கண்ணிற்பட்டநாகமுஞ்சாகாது.
சத்துருவாகிலும்சரணம்என்றால்தாங்கவேணும்.}

பல்லால்விடங்கக்கும்நாகந்திகைத்துப்பயந்தொதுங்கி *
நல்லார்கண்காணவந்தாலுங்கொல்லார்நண்ணலார்வரினும் *
பொல்லாதவரிவரொன்னார்மனம்பொறுத்தேயவரைக் *
கொல்லாமற்றாங்குவர்காணச்சுதானந்தகோவிந்தனே (௫௭)

மாடுகொல்லும்புலையனுக்குவாக்குசுத்தியும்ஆணையுமோ.

செல்வாய்ப்படும்பனையேட்டெழுதாமறைச்செம்மொழிபோற் *
சொல்வார்சொல்நம்பத்தகுவதல்லாமற்சொல்லைப்பிரட்டும் *
வல்வாய்ப்புலையர்சொல்நம்புவரோநித்தமாடுதின்னக் *
கொல்வார்க்கோராணையுண்டோவச்சுதானந்தகோவிந்தனே (௫௮)

{பனங்காட்டிலிருந்துகொண்டு
பாலைக்குடித்தாலும்கள்ளென்பார்கள்.}

மிடித்தாலுமெத்தபசித்தாலும்நல்லவர்மேனாதப்பி *
வடித்தாயிரந்தரங்கள்குடிப்பார்மனைவாசல்புகார் *
படித்தார்கள்கள்ளிறக்கும்பனங்காட்டினிற்பால்கொண்டுபோய்க்
குடித்தாலுங்கள்ளென்பரோயச்சுதானந்தகோவிந்தனே (௫௯)

{பட்சிக்குப்பசித்தாலும் பாற்கடல்எட்டியைப்பட்
சிக்குமோ. கொள்ளிகொண்டுதலைசொறிவார்களா.}

தெள்ளாரமுதக்கடற்கரையெட்டிச்செழுங்கனியைப் *
புள்ளானதுபசிகூர்ந்தாலுமேபொசியாதுகண்டாய் *

தள்ளாது கொள்ளிகொண்டே தினவென்றுதலை சொறிந்து *
கொள்ளாரெவருஞ் சொன்னேனச்சுதானந்தகோவிந்தனே (௯௰)

பூவிற்குங்கடையிலேபுல்லுவிற்பதுபோல.

தேறியமானுஷ்யமுள்ளோர் பெருமைசிறுமைபட *
மாறியவினைவிருத்திக்குள்ளாய் நின்றுவாழ்வரொன்றால் *
வீறியபூமலர்விற்குங்கடையிற்புல்விற்கவில்லை *
கூறியவாறெக்குமேயச்சுதானந்தகோவிந்தனே (௯௧)

குங்குமஞ்சுமந்தகழுதைகொள்ளுமோ பரிமளத்தை.

தமத்திலொளிசெய்யும்பொற்பூஷணங்கள் தலைச்சுமையாச் *
சுமத்தலுமாதர்க்கழகோகணவற்றெழாதிருந்தால் *
கமத்திற்பொதிச்சுமையாச்சுமந்தாலென்கழுதையுங்குங் *
குமத்தின்மணங்கொள்ளுமோவச்சுதானந்தகோவிந்தனே (௯௨)

{ பெருமான் நினைத்தால்வாழ்வுகுறைவா. }
{ பிரம்மா நினைத்தால்ஆயுசுகுறைவா. }

நிறையாயரசன்தயவுசெய்தாற்கலிநீங்கியிரம் *
பிறையாவளர்ந்துநிரம்பும்நல்வாழ்வுபிரியப்பட்டு *
மறையாலவிளங்கும்பிரம் மாநினைந் தால்வர்த்திக் கும்வயது *
குறையாதெனச்சொல்வரோயச்சுதானந்தகோவிந்தனே (௯௩)

{ தம்பிளந்தம்மைத்தாங்கும். }
{ மூலைசரிந்தால்வயிறுதாங்கும். }

தம்பினமானவர்கையினைத்தேசரணென்றடைந்தால் *
வம்பினென்றுதரிக்கத்தகுந்தள்ளவழக்கல்லவே *
விம்முமென்கொங்கைசரிந்தேவயிற்றில்விழிலதுதாங் *
கும்மெனச்சொல்லுவரோயச்சுதானந்தகோவிந்தனே (௯௪)

கழுதைக்குவிரிகட்டினதினாலேகுதிரையாமா.

சதிசெய்யும்நீலியைப்பெண்ணென்றுகொள்ளிற்றனதுகெடு *
மதியதுவாமவண்மேற்குறையில்லைவையாளிவிட்டால் *
கதிபெறவேநடவாவிரிகட்டுங்கழுதையைநற் *
குதிரையென்றேற்றங்கொள்ளாரச்சுதானந்தகோவிந்தனே (௯௫)

பாணிபிடித்தவள்பாக்கியம்ஏர்பிடித்தவன்என்னசெய்வான்.

பெண்டகுமில்லவள்வந்தமுகூர்த்தம்பெருகுஞ்செல்வம் *
உண்டவள்வாழுமனையிலெந்நாளுமுடுக்கைபொற்பூண் *
பண்டமில்லையென்னிற்பாணிபிடித்தவள்பாக்கியமேர் *
கொண்டவனென்னசெய்வானச்சுதானந்தகோவிந்தனே (௯௬)

உடும்புபோனாலும்போகட்டும்கையைவிட்டாற்போதும்.

அடும்படழிகாரனைவெட்டாமல்மன்னித்தனுப்பிவிட்டால் *
தொடும்பழிபேசவழக்குமுண்டோதொடர்ந்தேபிடித்த *
உடும்பதுபோயினும்போகட்டுங்கைவிடென்றுண்மைசொல்வோர்
கொடும்பழியேன்சுமப்பாரச்சுதானந்தகோவிந்தனே (௬எ)

கரும்புருசியென்றுவேரோடேபிடுங்கலாமா.

வள்ளலெனத்தருந்தாதாவென்றேதினம்வந்துவந்து *
கள்ளமனதிற்பொருள்கேட்கொணாதுகண்டாய்திரளா *
உள்ளகரும்புதித்திப்பெனவேருடனேபிடுங்கிக் *
கொள்ளநினைப்பர்களோவச்சுதானந்தகோவிந்தனே (௬அ)

{ செங்கோல்கெட்டுத்தேசயலையச்சிங்காரமதிலரண்செய்வதெவர்க்கு. அழிந்தநந்தவனத்திலேஅகவேயப்நதென்னகழுதைமேய்ந்தென்ன. }

விதிமுறைநீதிசெங்கோல்கெடத்தேசமெலிந்தலைய *
மதிலரண்செய்தலெவர்க்காகநந்தவனமழிந்தால் *
எதிரொதிரோடிகசுழுதைகள்மேயிலென்னேற்றந்தரும் *
குதிரைகள்மேய்ந்திடிலென்னச்சுதானந்தகோவிந்தனே (௬௯)

ஆடுகொழுக்கிறது இடையனுக்குலாபம்.

செழித்திடுஞ்செல்விபிறந்தகம்போய்த்திரும்பாமையினால் *
கழுத்திடுதாலியையாற்கட்டினேன்பலகாலும்வந்தே *
அழைத்திடக்கூட்டிவிடாரோவிடையனுக்காடுநன்றாக் *
கொழுத்திடலாபமன்றோவச்சுதானந்தகோவிந்தனே (எ௰)

பன்றியின்பின்போனகன்றும்மலந்தின்னும்.

பன்றியுடனுறவாகப்பழகினும்பாற்பசுவின் *
கன்றும்மலத்தைப்பொசிக்குமென்பாரக்கதையதுபோல் *
சென்றுறவாடிக்கயவர்பின்னேதிரிந்தாலறிவு *
குன்றும்வசைக்கிடமாமச்சுதானந்தகோவிந்தனே (எக)

கொள்ளைக்குப்போனாலும்கூட்டாகாது.

தேட்டாளர்தம்மிச்சையாத்தேடுவர்பொருள்தேடும்வழி *
காட்டாரொவர்க்கும்பின்வில்லங்கமாகுமெனக்கதவு *
பூட்டாதவொக்கவிட்டினிற்கொள்ளைக்குப்போய்ப்புகினும் *
கூட்டாகுமோவென்பரோயச்சுதானந்தகோவிந்தனே (எஉ)

ஆனைகட்டச்சங்கிலிதானெடுத்தேகொடுக்கும்.

தொடுத்திடுமூழ்வினைபோகாதெவற்குந்தொடருமுற்றும் *
இடுக்கண்வருமதுதன்னால்வருங்குற்றமென்பர்தன்னைத் *

தடுத்துத்தன்காலிலிடறினந்நனைத்தானெடுத்துக் *
கொடுத்திடுமயானைகண்டாயச்சுதானந்தகோவிந்தனே. (௭௩)

[குளத்தைக்கலக்கிப்பருந்துக்கிரையிட்டதுபோல.]

தளத்தைக்கண்டஞ்சிக்குறுமன்னர்கப்பந்தரக்கொள்வர்போர்க் *
களத்துட்படவவர்சீமையைவேந்தர்கைக்கொண்டழித்தல் *
விளர்த்திட்டமீன்களைக்காகம்பருந்துவிருந்துணவே *
குளத்தைக்கலக்கியதாமச்சுதானந்தகோவிந்தனே. (௭௪)

{தோட்டிபோலுழைத்தால்துரைபோற்சுகிக்கவே
னும். பூட்டிப்புதைத்தார்பொசிக்கமாட்டார்.
ஈட்டிஇழப்பர்தேனீயைப்போல.}

தோட்டியைப்போலுழைப்பார்பொருள்தேடிச்சுகிப்பதல்லாற்
பூட்டியறைக்குட்புதைத்துவைத்தாற்பொசியாரொவர்க்கோ *
ஈட்டிடத்தேன்பலபூவினிற்சென்றுசென்றீயெடுத்துக் *
கூட்டியிழப்பதுவாமச்சுதானந்தகோவிந்தனே. (௭௫)

[துர்சனப்பிள்ளைக்குஊரார்புத்திசொல்வார்.]

சற்சனராயுறவுற்றோரைப்பேணித்தவத்தியல்பாய் *
நற்சனனங்கொளெடுத்தாரைமெய்ச்சுவர்நாணமில்லாத் *
துர்சனப்பிள்ளைகட்கூரார்சொல்வார்புத்தியென்றுலகோர் *
குற்சிதஞ்சொல்வர்மெய்யேயச்சுதானந்தகோவிந்தனே. (௭௬)

{வயிற்றைப்பிறிக்காட்டினாலும்
மகேந்திரசாலம்என்பார்.}

தேறியநெஞ்சிற்பரிசுத்தனென்றுதெளிந்திடினும் *
மாறியவன்கண்ணருண்மைகொள்ளாரொருவன்வயிற்றைப் *
பீறிமுன்காட்டினுமாகேந்திரசாலப்பிரமையென்றே *
கூறியலைப்பர்கள்காணச்சுதானந்தகோவிந்தனே. (௭௭)

{கோழிகூப்பிட்டுவிடிகிறபொழுது
குக்கல்குலைத்தாவிடியும்.}

நிறைத்தோளியிட்டதிரைப்பாண்டின்மேலிட்டதித்திரைகொளும்
தனைதகோகையர்வந்தெழுப்புந்தபனன்சமையமறிந் *
திரைத்தோவெனக்குக்கிடங்கூப்பிடாமலிரவிடைநாய் *
குரைத்தோவிடியுமென்பாரச்சுதானந்தகோவிந்தனே. (௭௮)

{உயரஉயரப்பறந்தாலும்
ஊர்க்குருவிகருடனுமா.}

கருவையொப்பாமைந்தருவென்பமேராவுத்தமப்புருஷின் *
உருவையொப்பாருத்தமராவரோகுணமொப்பதல்லால் *

கருவியொப்பாயுயரப்பறந்தாலுங்கருடனுக்கூர்க் *
குருவியொப்பாமென்பரோவச்சுதானந்தகோவிந்தனே. (எசு)

[ஐங்காதம்போனாலும்அகப்பைவிலை அரைக்காசுதான்.]

ஐங்காதம்போயுமகப்பைவிலையரைக்காசென்பர்காண் *
எங்காகிலும்பணமிட்டுக்கொள்ளாரறிவினர்சென்றால் *
சிங்காரமானபொற்பூஷிணமாடைதியாகம்பெறார் *
கொங்கார்துளபத்தனேயச்சுதானந்தகோவிந்தனே. (அ0)

[மழைக்குத்தண்ணீர்மொண்டுவார்ப்பவர் ஆர்.]

மழைக்குத்தண்ணீர்மொண்டுவார்ப்பவராரிந்தவையகத்தோர் *
பிழைக்கப்பொழிவதுதற்குணங்காண்பெறும்பேற்றினுக்காய் *
அழைக்கக்கஜேந்திரன்மூலமென்றன்றதினன்பினுரம் *
குழைக்கக்கராவரிந்தாயச்சுதானந்தகோவிந்தனே. (அக)

{ அம்பிகொண்டுஆறுகடப்பார்
நம்பிகொண்டுநரிவால்கொள்வாரா. }

திண்டாடவெட்டும்ரணகளத்திற்செயங்கொள்ளும்வலி *
கண்டாலெதிர்நிற்பர்கூரப்படையைக்கைக்கொண்டுபுகார் *
அண்டாதவெள்ளத்திலோடங்கொளாமலடுநரிவால் *
கொண்டாறுதாண்டுவரோவச்சுதானந்தகோவிந்தனே. (அஉ)

{குடியிருக்கிறவீட்டிலேகொள்ளி
வைத்துக்கொண்டாற்போல.}

நள்ளிருட்போதில்விளக்கிட்டதாம்நல்லவரிருந்தால் *
தெள்ளியசீர்பெறும்வீட்டுக்கழகென்பர்தீம்பர்வந்தால் *
தள்ளிவிடாமற்குடிவைத்துக்கொள்ளிற்றமதிறப்பித் *
கொள்ளிவைத்துக்கொண்டதாமச்சுதானந்தகோவிந்தனே. (அரு)

{ தலைவன்நிற்கத்தண்டுநிற்கும்.
தலைவன்மயங்கச்சர்வம்மயங்கும் }

பொரக்கத்திகட்டிக்கொண்டேதுரையானவன்போர்முகத்தில் *
வரக்கொக்கரித்தெழுஞ்சேனையஞ்சாதுவரும்விசையம் *
அரக்கர்க்கிராமனெதிர்நிற்கலங்கையழித்ததன்று *
குரக்குப்படையல்லவோவச்சுதானந்தகோவிந்தனே. (அச)

[குழந்தையும்தெய்வமுங்கொண்டாடின இடத்திலே.]

அண்டாவொருங்குணவினர்செல்வர்களாயிருந்தும் *
கண்டாதரவினழைத்தால்வருவர்கரிசின்ம் *
துண்டாய்க்குழைந்தையுந்தெய்வமும்நித்தமுறவுசெய்து *
கொண்டாடமுன்னிற்குமேயச்சுதானந்தகோவிந்தனே. (அரு)

{ கோணக்கொம்பேறியென்னகுதிரையேறியெ
ன்ன, வீணர்க்குங்கீர்த்திக்கும்மெத்தவுந்தூரம். }

பூணத்தகும்புகழ்ப்பூஷணங்கொள்ளப்பொருளுதவா *
வீணர்க்குங்கீர்த்திக்குமெத்தவுந்தூரமிகுஞ்செல்வராய்க் *
காணத்தையுண்ணுங்குதிரையிலேறிற்கவிக்குலம்போற் *
கோணக்கொம்பேறிலென்னுமச்சுதானந்தகோவிந்தனே. (அசு)

{ பன்றிக்குட்டிகளெல்லாம்
பருயானைக்குட்டியாமா. }

வெஞ்சரக்குப்பைதொடுத்தெய்யவேவெற்றிராகவன்கைச் *
செஞ்சரத்துக்கிணையாமென்பரோஇட்டதீனிதின்று *
சஞ்சரிக்கும்பன்றிக்குட்டிகடாம்மததாரைபொங்கும் *
குஞ்சரக்கன்றுக்கொவ்வாவச்சுதானந்தகோவிந்தனே. (அஎ)

{ தன்னைக்கொல்லவந்தபசுவைத்
தான்கொன்றூற்பாவமில்லை. }

ஆறியவெஞ்சினத்தீமூளச்செய்யிலரசர்கொல்வார் *
தேறியநெஞ்சன்தனைக்கொல்லவந்தசினப்பசுவை *
மாறிடக்கொன்றிடிற்பாவமிலையென்றுவையகத்தோர் *
கூறியவார்த்தைபொய்யோவச்சுதானந்தகோவிந்தனே. (அஅ)

{ செய்யர்குதிரைக்கொம்புங்கொடுப்பார்.
தீயர்செம்பாலடித்தகாசுங்கொடார். }

வம்பாவசைக்கவிநூறுசொன்னாலும்வைதாலுமெண்ணார் *
தம்பாடுசொல்லிவழிவிடுவார்கள்தனப்புலையர் *
செம்பாலடித்திடுங்காசுங்கொடார்செய்யரோகுதிரைக் *
கொம்பாகிலுங்கொடுப்பாரச்சுதானந்தகோவிந்தனே. (அகூ)

{ பொருளும்போகமுங்கூடவரா,
புண்ணியமேகூடவரும். }

கூடவராதிட்டபொற்பூஷணங்கள்துணையெனக்கொண் *
டாடவராதுசதுரங்கசேனையும்ஆண்மையும்போம் *
ஓடவராதெமதூதர்வந்தாலுள்ளரொக்கமுந்தன் *
கூடவராதென்றெண்ணாச்சுதானந்தகோவிந்தனே. (கூ௰)

{ சாணையிற்றேய்த்ததினாலே
சந்தமற்றகுறடுசந்திக்குமோ. }

அழைத்தாயிரந்தரம்புத்திசொன்னாலடங்காதவம்பர் *
தழைத்தாலுமென்னவர்கெட்டாலுமென்சந்தமற்றகுற *

டிழைத்தாயிரந்தரஞ்சாணையிற்சுற்றியெடுத்துநன்னீர்க் *
குழைத்தாலும்வாசந்தராதச்சுதானந்தகோவிந்தனே. (௯௧)

{ கூடியிருந்துகுலாவுவார்வீட்டில்
ஓடியுண்ணுங்கூழுமினிதே. }

சூழாதுவண்டினஞ்செண்பகப்பூவைத்தொடாதுவெறும் *
பாழானநத்தத்தெருக்கீன்றபூமணம்பற்றிப்புல்லும் *
தாழாதுநட்பினுறவுகொண்டாடத்தக்கார்மனையில் *
கூழாகிலுமினிதேயச்சுதானந்தகோவிந்தனே. (௯௨)

{ ஆயிரம்பசுக்களிலொருபசுவுதைத்துக்
கொண்டால் அதுவொருநஷ்டமா. }

தண்டாதருள்செயுந்தாதாக்களிலொருத்தன்மறுத்தல் *
கண்டாலதுகொண்டுதாழ்வல்லவேகலியாலிரப்போர்க் *
குண்டானபால்கறக்கும்பசுவாயிரத்தொன்றுதைத்துக் *
கொண்டாற்குறையென்பரோவச்சுதானந்தகோவிந்தனே. (௯௩)

[ இறந்தவன்பிள்ளைஇருந்தவனடைக்கலம். ]

இடைப்படச்செத்தவன்பிள்ளைநன்றாகவிருந்தவன்கை *
அடைக்கலமென்றுலகஞ்சொலுமேயதுபோற்றமியேன் *
மிடைப்படப்பார்த்திருந்தாற்றகுமோபசுமேய்த்தவந்நாள் *
குடைக்குவடேந்தினையேயச்சுதானந்தகோவிந்தனே (௯௪)

[ கரும்புகசப்பதுவாய்க்குற்றம். ]

வணங்காருன்பாதங்கள்வாழ்த்தாருன்னாமங்கள்வாழ்த்திநித்தம் *
இணங்காரறிவற்றபுல்லர்நல்லோர்தம்மியற்கைகுன்றார் *
கணங்காணுங்கட்டிக்கரும்புதின்பார்க்குக்கசப்பதுவாய்க் *
குணங்காண்கரும்பதென்றாரச்சுதானந்தகோவிந்தனே. (௯௫)

{ நடந்தார்க்குநாடெங்குமுறவு
கிடந்தார்க்குப்பாயேயுறவு. }

நடந்தார்க்குநாடெங்கும்நல்லுறவாகும்நடையொழிந்து *
கிடந்தார்க்குப்பாயலுறவன்றியென்னென்றுகேட்பவரார் *
இடந்தாவெனக்குன்பதமேகெதிசிற்றிடைச்சியர்பாற் *
குடந்தாவியமுகுந்தாவச்சுதானந்தகோவிந்தனே. (௯௬)

[ கரும்புதின்னக்கூலிகொடுப்பார்களா. ]

வாலியைக்கொன்றுசுக்கிரீவனைப்பட்டத்தில்வைத்துமுந்நீர் *
வேலிகடந்திலங்கைவீடணனைவிளங்கவைத்தாய் *
காலியைமேய்த்துள்ளபால்குடித்தாய்நற்கரும்புதின்னக் *
கூலிகொடுப்பவராரச்சுதானந்தகோவிந்தனே. (௯௭)

{வல்லார்இளைத்தால்வந்திளைப்பாறுமென்று
சொல்லாதிரார்கள்சுத்தவீரர்கள்.}

வல்லாரமர்செய்துகையிளைத்தாலவர்வம்பினெனச் *
சொல்லாதிராரிளைப்பாறுமென்பார்சுத்தவீரர்படை *
எல்லாமிழந்தும்நிராயுதனாய்நின்றும்ராவணனைக் *
கொல்லாதுவிட்டனையேயச்சுதானந்தகோவிந்தனே. (௯௮)

{வஞ்சகர்க்கெத்தனைவாஞ்சைகாட்டினும்
நெஞ்சகந்தன்னில்நேசங்கொள்ளார்.}

நெஞ்சாரவஞ்சகர்க்கெத்தனைசெய்யினும்நேசங்கொள்ளார் *
அஞ்சாயன்மென்குயின்முட்டையைத்தன்முட்டையாமென்றெ
எஞ்சாதடைகிடந்துங்கருங்காகமிகல்விளைக்கக் [ண்ணி
குஞ்சாகிப்பூங்குயிலாமச்சுதானந்தகோவிந்தனே. (௯௯)

{மஞ்சனமும்மலருங்கொண்டுவணங்காவிட்டாலும்
நெஞ்சகத்தாலேநினைப்பதேபோதும்.}

மஞ்சனந்தேடிமலர்தேடியுன்னைவணங்கப்பெற்றேன் *
நெஞ்சகந்தன்னினினைக்கப்பெற்றேனினையாவிடினும் *
அஞ்சலன்றென்னவுனக்கேபரமடலாழிகொண்டு *
குஞ்சரங்காத்தவனேயச்சுதானந்தகோவிந்தனே. (௱)

{மானார்கலவியில்மயங்கிக்கிடக்கினும்
தானேதன்பதந்தருவான்கோவிந்தன்.}

தேனேயெனுமொழிமானார்கலவியிற்சேர்ந்துறினும் *
தானேயெனக்குப்பதந்தருவானன்றுசானகிக்கா *
மானேயெனவந்தமாரீசன்மேற்செலவாளிதொட்ட *
கோனேசக்கிராயுதனேயச்சுதானந்தகோவிந்தனே. (௱௧)



முந்தச்செனனத்தில்யான்செய்தபூசைமுயற்சியிற்கோ *
விந்தச்சதகம்விண்ணப்பஞ்செய்தேனென்வினைதொலைத்தேன் *
இந்தச்செனனத்திற்றுன்பப்படாமலிருந்திடவை *
குந்தப்பதவிபெற்றேனச்சுதானந்தகோவிந்தனே. (௱௨)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

